Regd. No. 2975. ஸ்ரீ:

# SRI RAMANUJAN

**Editor:** P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM-3.

# ஸ்ரீ ராமாநுஜன் - 281.

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

வருஷச் சந்தா ரூ. 10. ஜீவியச் சந்தா ரூ. 58.

பேரருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி •
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி •—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி •
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1—3—1972 மாசி மாதம் வெளியிடப்பட்டது.

ஸ்ரீ

# ஸ்ரீ ராமாநுஜன் 231



சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபையின் சார்பாக
மாதந்தோறும் வெளிவருவது
ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

ஸம்புடம் 24 | விரோதிஹ்ருக்ஸு மாசி மீ 1-3-1972 | ஸஞ்சிகை 5

## "மாசிப் புனர்பூசங் காண்மினின்று"

உபதேசரத்தின மாலையில், மாமுனிகளால் *கொல்லி நகர்க்கோன் குலசேகரன் பிறப்பால் நல்லவர்கள் கொண்டாடும் நாள்* என்று குலாவப்பட்ட மாசிப் புனர்பூசம் ஸகல விஷ்ணுவாலயங்களிலும் சிறப்புறக் கொண்டாடப் பெற்றது. இவ்வாழ்வாரருளிச் செய்த பெருமாள் திருமொழியிலிருந்து சில சுவைப் பொருள்களை ஈண்டனுபவிப்போம். அதில் முதற் பதிகத்தில் இரண்டாம் பாட்டில் * அரங்கத்தரவணையிற்பள்ளி கொள்ளும் மாயோனை மணத்தூணே பற்றி நின்று என் வாயார என்று கொலோ வாழ்த்துநாளே'' என்கிற பாரிப்பு உள்ளது. அழகிய மணவாளனுடைய கர்ப்பக்ருஹத்தினுள் ஸ்வர்ண கவசமிடப் பெற்ற இரண்டு தூண்கள் உள்ளன. அவற்றுக்குத் திருமணத்தூண் என்பது ஸம்பிரதாயத் திருநாமம். இத்திருந்தூணைப்பற்றிக் குலசேகராழ்வார் தவிர வேறேராழ்வாரும் பேசிற்றிலர். இங்கு "மாயோனை மணத்தூணினருகே நின்று'' என்று கூறியிருக்கலாம். "பற்றி நின்று'' என்றுள்ளது. இவ்வருளிச் செயலின் சுவையை ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் பட்டர் ஒரு சுலோகத்தினால் காட்டியருளியிருப்பது மிகவற்புதம். அந்த சுலோகம் வருமாறு;

" சேஷசய லோசநாம்ருத நதீ ரயாகுலித லோலமாநாநாம்,
ஆலம்பமிவ ஆமோதஸ்தம்பத்வய மந்தரங்கமபியாம:.''

என்பதாம். இதன் கருத்தாவது;—பெரிய பெருமாளுடைய திருக்கண்ணோக்கமாகிற அமுத வாற்றின் பெரு வெள்ளமானது, அநுபவிக்க இழிந்தவர்களை ஒருமித்து (ஸூதாரித்து) நிலைநின்று அநுபவிக்க வொட்டாமல் தூக்கித்தள்ளி அசைக்குமாம்: அப்போது அவர்கள் எதையேனும் பற்றிக் கொண்டல்லது நிற்கமுடியாது, ஆற்றின்

பெருவெள்ளத்தில் அடித்துக் கொண்டு போமவர்களுக்கு ஒரு பிடிமானம் கிடைத்தால் தானே ஸுதாரிக்க முடியும். அதுபோல, இங்கும் பற்றுவதற்கு ஓர் ஆலம்பம் வேண்டியிருக்குமே, அதற்காக நாட்டப்பட்ட ஸ்தம்பங்களோ இவை! என்று உல்லேகிக்கும் படியாகவுள்ளதாம். இது பட்டருடைய விலக்ஷண புத்தி சமத்காரம்."

அடுத்த இரண்டாம் பதிகம்*தேட்டருந் திறல்தேனினை யென்பது பாகவதோத்தமர்களின் பெருமையை யநுபவிப்பது. நம்மாழ்வார் திருமங்கையாழ்வார் முதலானோரும் பாகவதர்களின் பெருமைகளைப் பரக்கப் பேசியிருந்தாலும் அதை இவ்வாழ்வார் பேசியிருப்பது அதிவிலக்ஷணம். (2)* ஆடிப் பாடி யரங்கவோவென்றழைக்கும் தொண்டரடிப்பொடி ஆடநாம் பெறில், கங்கைநீர் குடைந்தாடும் வேட்கை என்னாவது! என்கிறார். ஸ்ரீவைஷ்ணவர்களின் ஸ்ரீபாத தூளிகள் கங்காதீர்த்தத்திற் காட்டிலும் புனிதமான தென்கிற அத்யவஸாயமுடைமை காண்க. அதற்கடுத்த மூன்றும்பாட்டில் "அரங்கன் கோயில் திருமுற்றம் சேறு செய் தொண்டர் சேவடிச் செழுஞ்சேறு என் சென்னிக்கணிவனே" என்கிறார். ராஜாதிராஜரான விவர் கஸ்தூரீதிலகமணிந்து கொண்டு விளங்கவேண்டியவர் தொண்டர் சேவடிச் சேற்றை யணிந்து கொள்ள விருப்பங் காட்டியிருப்பது வியக்கத்தக்க தல்லவா?

திருவேங்கடத்தைப்பற்றின நான்காவது பதிகம் ஊனேறுசெல்வ மென்பது பரம போக்யமானது. இதில் ஒவ்வொரு பாசுரத்திலும் (திருமலையில்) ஒவ்வொருவிதமான பிறவியை விரும்புகிறார். முதற்பாட்டில் ✳ கோனேரி வாழுங் குருகாய்ப் பிறப்பேனே✳ என்று ஸ்வாமிபுஷ்கரிணியில் கொக்காகப் பிறக்க விரும்பினார். அது பறந்து செல்லக் கூடிய பிராணியாதலால் வேறிடம் செல்ல மாட்டாததான மீனின் பிறவியை விரும்பினார்இரண்டாம் பாட்டில். நீர் வற்றிப்போனால் மீன் முடியுமே யென்று அப்பிறவியை வெறுத்து ✳ வேங்கடக்கோன்தான் உமிழும் பொன்வட்டில் பிடிப்பானொரு கிங்கரனுடைய பிறவியை விரும்பினார் மூன்றும் பாட்டில். பொன்வட்டில் பிடித்தால் களவு செய்யத்தீயபுத்தியுண்டாகுமோ வென்றஞ்சி ✳வேங்கடத்துச் செண்பகமாய் நிற்க விரும்பினார் நாலாம் பாட்டில். ஸத்யபாமைப் பிராட்டிக்காகக் கற்பகத்தரு பெயர்க்கப்பட்டு வேறோரிடம் சென்று சேர்ந்ததுபோல செண்பகத்தருவும் காணிக்கை ஸமர்ப்பிக்கும் மஹாப்ரபுக்களால் பெயர்த்துக் கொண்டு போகப்படலாமோ என்றதிசங்கித்து ஒன்றுக்கு முதவாத மலட்டு மரமான தம்பகமாய் நிற்கும் நிலையை விரும்பினார் ஐந்தாம் பாட்டில். காட்டுமரங்களை வெட்டிக் கொண்டுபோகும் அரசாங்கத்தாரால் இதுவும் வெட்டிக்கொண்டு போகப்படுமோ என்றதிசங்கித்துத் திருமலையிலேயே நிலைத்து நிற்கும் ஒரு குவடாகப் பிறக்க வேணுமென்று பாரித்தார் ஆறும்பாட்டில். பௌத்த விக்ரஹமடிக்க அதையும் பெயர்த்துக் கொண்டு போவர்களோ வென்று அதிசங்கித்துத் திருவேங்கடமலைமேல் கானாறாய்ப்பாய வேணுமென்று பாரித்தார் எழாம்பாட்டில். கானாறாய்ப் பெருகுமது வேறோரிடம் சென்று சேருமாதலால் அப்பிறவியையும் வெறுத்து திருமலைக்கு வழியாக நிற்கப் பாரித்தார் எட்டாம் பாட்டில். வழியானது அவரவர்களது ஸௌகரியத்திற்கு ஏற்றவாறு அமைத்துக்கொள்ளப்படு மதாகையாலே தாம் ஒருவழியாய்நிற்க, வேறுருவழி அமைந்து விடுமோ என்னு மதிசங்கையினால் திருவேங்கடமுடையான் கோயிலின் வாசலில் படியாய்க்கிடக்கும் படியைப் பாரித்தார் ஒன்ப

தாம்பாட்டில். 'படியாய்க் கிடந்து உன்பவளவாய் காண்பேனே' என்ற பாரிப்புக்குப் பயனில்லாதபடி அதற்கு ஸுவர்ணகவசமிட்டிடுவர்களோ, வென்று சங்கித்து "எம்பெருமான் பொன்மலை மேல் ஏதேனுமாவேனே" என்றூர் பத்தாம் பாட்டில்.

"எம்பெருமான் பொன் மலை மேல் ஏதேனு மாவேனே"

இவ்வாறே தாம் விரும்பின பிறவிகள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொருவிதமான அநுபவம் தோன்றிக் கொண்டேயிருந்தமையால் இன்னபிறவியென்று குறிப்பிட மாட்டாது "திருமலையில் ஏதேனு மொரு பிறவியாகுக" என்று தலைக்கட்டுகிறூர். இங்கு பட்டர் அருளிச் செய்வராம்— "நானு மறிய வேண்டா, திரு வேங்கட முடையான் தானுமறிய வேண்டா; திருமலையிலுள்ள தொரு பதார்த்தமாகப் பிறக்க வமையும்" என்று. அனந்தாழ்வானருளிச் செய்வது மற்றொரு படியாம், அதாவது "திருவேங்கடமுடையான்தானுகவும் அமையும் "என்று, இவ்வருளிச் செயலின் கருத்து உட்புகுந்து உணரத்தக்கது. சேஷத்வமே வடிவானது ஆத்மஸ்வரூபமாக என்றுணர்ந்தவர்கள் சேஷவ்ருத்திக் குறுப்பான பிறப்பை விரும்புவதே ப்ராப்தமாக்கும். இப்போது ஆழ்வார்க்குத் திருமலையில் வாஸம் ஒன்றே உத்தேச்யமாக நிற்கையாலே சேஷித்வமோ சேஷத்வமோ அதில் நோக்கில்லாமல் திருமலையில்வாஸமொன்றையே நோக்கி அங்ஙனே விரும்புவதாக நிர்வஹிக்கும் படி. உண்மையில் ஆழ்வார்க்குத் திருவேங்கடமுடை யான்தானுக விருக்கை ஈஷத்தும் அபிமதமன்று, திருமலையில் வாஸமொன்றே உத்தேச்யமென்கிற அபிஸந்தியை நிலைநாட்டுவதொன்றே அனந்தாழ்வான் நிர்வாஹத்தின் உள்ளுறை. கரும்புதின்ன வேணுமென்று விரும்பினவனை நோக்கி, நீ கரும்பேயாகக்கடவாய், என்று ஒருவர் அநுக்ரஹம் செய்தால் அதில் ரஸ முண்டோ?

ஆளவந்தார் ஆத்மஸ்வரூபத்தை ஸித்தித்ரயத்தில் "தேஹேந்த்ரிய மந: ப்ராண தீப்யோந்ய:" என்று நிஷ்கர்ஷித்திருளிச் செய்தேயும் ஸ்தோத்ரரத்னத்தில் "வபுராதிஷு போபி கோபிவா அஸாநி" என்றும் "குணத: யதாததாவித: அஸாநி" என்று மருளிச்செய்ததை இங்கு ஒருபுடை யொப்பு நோக்குக ... ... .... ...

## விருந்தாவனத்தில் விசேஷமொன்று

விருந்தரவனத்தில் ஸ்ரீமத் கோவர்த்தனம் ஸ்வாமியின் சாச்வதகீர்த்தி ஜய த்வஜமான ஸ்ரீரங்கமன்னராண்டாள்ஸன்னிதியில் 4.3.72 தொடங்கி 13.3·72 வரை ப்ரஹ்மோத்ஸவம் விசேஷவைபவமாக நடைபெறவிருக்கிறது. அதில் 4,6,8 உத்ஸவ தினங்களில் உபயவேதாந்த பீட வித்வத்ஸம்மேளனத்தை ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீமந்நாராயணராமாநுஜஜீயர் ஸ்வாமிகள் ஆங்கு எழுந்தருளியிருந்து சிறப்பாகநடத்தி வைக்கத் திருவுள்ளம் பற்றியிருக்கிறூர். வட இந்தியாவிலுள்ள ஸ்ரீவைஷ்ணவபண்டிதர்கள் பலர் இந்தஸம் மேளனத்தில் கலந்து கொள்ளுவார்கள்* நாமும் இதில்கூடியிருந்து குளிரக் கருதியிருக்கிறோம். .... ....

———

ஸ்ரீ

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.

ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம்

அண்ணங்கராசார்யர் ஸ்வாமியின்

விரோதிக்ருத் வருஷத்திய

# மீன விசாகோத்ஸவப் பத்திரிகை

ஸ்ரீ ஸ்வாமியின் எண்பத்தோராவது திருநக்ஷத்திர பூர்த்தியை முன்னிட்டு

## ஸ்ரீ காஞ்சியில் ஸ்வாமியின் திருமாளிகையில்

நாளது பங்குனிமீ 11உ (24-3-72) வெள்ளிக்கிழமை முதல்

பங்குனி 20உ (2-4-72) ஞாயிற்றுக்கிழமை வரை,

வேத பாரயணம், திவ்யப்ரபந்தஸேவை, ரஹஸ்யாநு
ஸந்தானம், ஸ்தோத்ரபாடம் வித்வான்களின் உபந்யாஸம்
இவை நடைபெறும்.

ஆப்தர்கள் அனைவரும் கூடியிருந்து சிறப்பாக நடப்பிக்கும்படி
பிரார்த்திக்கப்படுகிறூர்கள்.

வேதபாராயண கோஷ்டிகள் கடந்த
ஸம்வத்ஸரங்களிற் போலவே ஸாமவேதம், சுக்லக்ருஷ்ண
யஜுர்வேதம் க்ரமாந்தம் திருவீதி வலத்துடன் நடைபெறும்.

இங்ஙனம்,
பிரதிவாதி பயங்கரம் செல்வமணி என்கிற
ரங்கநாத தாஸன்.

காஞ்சீபுரம்
1-3-1972

---

வைதிகர்களுக்கு ஓர் அறிவிப்பு :— எண்பத்தோராவது வயது பூர்த்திக்காக எண்பத்தொரு வேதபதங்களைப் பற்றின விமர்சம் தனிப் புத்தகமாக வெளியிடப் படும். வடமொழியிலும் தென்மொழியிலும். P.B.A.

# உத்தமதேசிகனும் உத்தமூர்தேசிகரும்

ஹைதராபாத் மஹாநகரத்தில் ஸ்ரீ தேசிக ஸபையென்று ஒன்றுளது. அதைச்சேர்ந்த மஹநீயர்கள் நேற்று மார்கழியில் திருப்பாவை மஹோத்ஸவமொன்று நடத்தி திருப்பாவை மலரும் ஒன்று வெளியிட்டுள்ளார்கள். அதன் முகப்பில் Sri Desika sabha, Thiruppavai Festival. ஸ்ரீ வில்லிபுத்தூராண்டாள் திருவுருவப்படம் Souvenir 1972. என்றுள்ளது. [இது அடையாளத்திற்காக எழுதினபடி] இந்த மலர் பதினுபிரக்கணக்கான ரூபாய் செலவில் ஏறக்குறைய 175 பக்கங் கொண்டதாக ஆர்ட் பேபரிலேயே வெளியிடப்பட்டுள்ளது. அட்வர்டைஸ்மெண்டுகளே இதில் அதிகம். ஆனாலும் சில கட்டுரைகளுமுண்டு. ஸ்ரீமதஹோபில மடமும் ஸ்ரீபரகாலமடமும் இதற்கு மங்களாசாஸனமளித்துள்ளது. இம்மலரில் வெளியிடுவதற்காகத் திருப்பாவை விஷயமான ஒரு கட்டுரையைத் தெலுங்கு பாஷையில் எழுதியனுப்ப வேணுமென்று இச்சபையார் சில மாதங்களுக்கு முன்பு நம்மைப்பலகால் வேண்டினர்கள். "திருப்பாவையின் திருவவதாரம்" என்னும் பொருள்பற்றித் தெலுங்கு பாஷையில் நீண்டதோர் வியாஸம் அச்சபைக்கு அனுப்பினோம். அதை முகப்பில் வெளியிட்டுள்ளார்கள். "ஆண்டாளும் தேசிகனும்" என்கிற தமிழ் வியாஸம் உத்தமூர் தேசிகருடையது முடிவில் வெளியிடப்பட்டுள்ளது. அதன் பிறகு சிற்சில ஆங்கில வியாஸங்களுமுள்ளன. உத்தமூர் தேசிகருடைய கட்டுரையின் முடிவுரை என்னவென்றால்—

> ஸ்ரீதேசிகனின் பெருமையை ஸ்ரீலோகாசார்யர் பரக்கப் பேசியுள்ளார்; "சீரொன்று தூப்புல் திருவேங்கடமுடையான், பாரொன்றச் சொன்ன பழமொழியுள்— ஓரொன்றுதானே அமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு வானேறப் போமளவும் வாழ்வு."— ஸ்ரீவைஷ்ணவ குலதனமான இந்த ஸ்ரீஸூக்திகளை ஒவ்வொருவரும் தம் இல்லத்தில் வைத்துப் பாதுகாப்பது ஸ்ரீதேசிக பக்தர்களின் கடமையாகும்"

என்றெழுதி முடிக்கப்பட்டிருக்கின்றது. இதைப்பற்றின தத்துவத்தை இவருக்குணர்த்தும் வியாஜத்தினல் உலகுக்கெல்லாமுணர்த்துவோம்.

ஸ்ரீதேசிகனுடைய பிரபாவத்தை ஆந்ய ப்ரஹ்மதந்த்ரஸ்வாமி ச்லோகரூபமாகவும் த்விதீய ப்ரஹ்மதந்த்ரஸ்வாமி தமிழ் வசனமாகவும் பணித்துள்ளார்கள். தமிழ் வசனமான வைபவம் "சென்னை அஸ்மத் தேசிகஸம்ப்ரதாயநிர்வாஹ ஸபை" என்கிற ஸபையின் மூலமாகச் சிலவாண்டுகட்கு முன்பு மறுபதிப்புச் செய்து வெளியிடப்பட்டுள்ளது. இது ஸ்ரீதேசிகன் எழுநூறாண்டு நிறைவுநினைவுமலர்களுள் ஒன்றெனத் தெரிகிறது. அது ஸம்ஸ்கிருத ஆங்கில பாஷைகளிலும் மொழி பெயர்த்து வெளியிடப்பட்டுள்ளது. அதில், ஆத்யப்ரஹ்மதந்த்ரஸ்வாமி பணித்த சுலோகமாலிகைகளும் அங்கங்கே பலபல கையாளப்பட்டுள்ளன. தமிழ்ப் பாஷையிலுள்ள வைபவமே ஸாக்ஷாத்த்விதிய ப்ரஹ்மதந்த்ரஸ்வாமி பணித்ததாகையாலே ஸ்ரீலோகாசார்யர்க்கும் ஸ்ரீதேசிகனுக்குமுள்ள தொடர்பைப்பற்றி அந்த வைபவ நூல் தெரிவிக்கும் விஷயங்களை வரிசையாக எடுத்துக் காட்டுகிறோம். அதிலிருந்து * சீரொன்று தூப்புல் திருவேங்கடமுடையானென்ற பாட்டின் பாங்கு தெரியவருமென்று. அதில் பக்கம் 11-ல் "தேசிகன் திருவரங்கம் சென்று சேரப் புறப்படுதல்" என்ற மகுடத்தின் கீழுள்ள த்விதீய ப்ரஹ்ம தந்த்ரஸ்வாமி ஸ்ரீஸூக்திகளிவை—

"பின்பு தென்னாடும் வடநாடுந்தொழ நின்ற திருவரங்கத் திருப்பதியை மங்களாசாஸனம் செய்ய விரும்பினார் தேசிகன். ஸகல ஆழ்வார்களும் ஸகல பூர்வாசார்யர்களும் ஈடுபட்டு மண்டியிருந்த ஸ்தலம் அது வாகையாலே அங்கே நித்ய வாஸம் பண்ணவேணுமென்றும், அங்கே நித்யகாலக்ஷேப நிரதர்களான பிள்ளைலோகாசாரியர் ஸுதர்சனபட்டர் முதலானாருடைய திருவடி நிழலிலேயொதுங்கி நெடுங்காலம் வர்த்திக்கவேணுமென்றும் ஆசை கொண்டு புறப்பட்டருளியாச்சுது. "லோகாசார்யபதாம்போஜ ஸேவாஹேவாகதோ த்ருதம், ப்ரஸ்தஸ்தே ரங்க நகரீம் வேதாந்தார்யோ மஹாமநாஃ" என்று அஸ்மதாசார்யர் பணித்த தேசிக திவ்ய சரிதத்திலும் சொல்லிற்று. பேரருளாளன் நியமனங் கொண்டு புறப்பட்டருளின தேசிகன் தேவியாரோடுங்கூட வழியடைவிலே அப்பக்குடத்தான் ஸந்நிதியென்கிற திருப்பேர் நகரிலே சென்று சேர்ந்து அங்குள்ள ஸ்ரீவைஷ்ணவர்களை நோக்கி கோயில் வ்ருத்தாந்தம் விசாரிக்குமளவிலே, அவர்கள் துருஷ்கயவநோபப்லவங்களைச் சொல்லி ஸ்வாமி பிள்ளை லோகாசாரியர், அவருடைய திருத்தம்பியாரான அழகிய மணவாளப்பெருமாள் நாயனார். ச்ருதப்ரகாசிகா பட்டர் முதலான பரிகணிதர்களான ஆசார்ய ச்ரேஷ்டர்கள் நம்பெருமாளை யெழுந்தருளப் பண்ணிக்கொண்டு வெளியேறியிருக்குஞ் செய்திகளையும் விசதமாகச் சொல்ல, அது கேட்ட தேசிகன் வேரற்ற மரம்போல விழுந்து துடித்து,"ஸம்ஸாரஸர்ப்பஸந்தஷ்டமர்த்ய ஸந்த்ராண தீக்ஷிதம், லோகாசார்யம் விநா ரங்கே கதம் வர்த்திது முத்ஸஹே?" [முமுக்ஷுஜந ரக்ஷகரான பிள்ளைலோகாசார்யரில்லாத திருவரங்கத்தில் நான் எப்படி வர்த்திப்பேன்!] என்று சொல்லிச் சொல்லிப் புலம்பி, இப்போது நான் திருவரங்கம் செல்லக் கடவேனல்லேன்; கொங்கு மண்டலத்தில் பாங்கான வோரிடத்தில் சிலகாலம் வாழ்ந்திருந்து ஸ்ரீரங்கஸ்ரீ நிருபத்ரவமாகி நம் பெருமாளும் கூடச் சென்ற ஸ்ரீமல்லோகாசார்ய ப்ரப்ருதிகளான பரமஸாத்விகஸதாசார்ய ஸார்வ பௌமர்களும் ஸ்வஸ்தானம் வந்து சேர்ந்த பிறகு செய்தியறிந்து கொண்டு திருவரங்கத்தேற விடை கொள்ளக் கடவேன்" என்று அதி நிர்வேதத்துடனே அருளிச் செய்து ஸ்ரீரங்கம் செல்லாமே அப்பக்குடத்தான் ஸந்நிதியிலிருந்து நேராகப் பல விடங்களுக்கெழுந்தருளி வானியாற்றங்கரையில் சில மாதங்கள் தங்கியிருந்து அங்கும் இருப்புக் கொள்ளாமல் திருநாராயணபுரத்தில் சில காலமும் பச்சிமவாஹினிக் கரையான ஸ்ரீரங்கபட்டணத்தில் சில காலமும், ஸத்தியமங்கலத்தில் சில காலமும் எழுந்தருளியிருந்தாச்சு. அப்போது ஸ்ரீரங்கஸ்ரீ விரைவில் நிருபத்ரவமாக வேணுமென்பதற்காக ஸ்வாமி தேசிகன் அபீதிஸ்தவமருளிச் செய்து அங்குள்ளாரெல்லாரையும் அந்த ஸ்தவத்தை நித்யமும் நூற்றெட்டாவ்ருத்தி பாராயணம் செய்ய நியமித்தருளி, தாம் அந்த ஸ்தவத்திலிருந்து "நிரஸ்தரிபுஸம்பவே க்வசந ரங்கமுக்க்யே விபோ! பரஸ்பர ஹிதைஷிணும் பரிஸரேஷு மாம் வர்த்தய" என்கிற பாகத்தை அநவரதமும் அநுஸந்தித்துக் கொண்டு "லோகாசார்ய ததீயஸோதரமுகாந் ஆசார்யவர்யாந் கதா ஸேவேயேதி ஸதா விஷண்ணஹ்ருதய: ஸ்ரீ வேங்கடேசோ குரு:" என்று அஸ்மதாசார்யர் பணித்தபடியே அதுவே புலம்பலாய் மிகுந்த ஆர்த்தியோடே பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீஸூக்திகளைக் கேட்டுக் கொண்டு காலம்கழித்து வந்தார். இப்படி கங்குலும்பகலும் கண்துயிலறியாள் கண்ணநீர் கைகளாலிறைக்கும் என்னும் படியாக ஸ்வாமி தேசிகன் அலமாப்போடே எழுந்தருளியிருந்த காலத்திலே வருவார் செல்வார் முகமாக ஸ்ரீரங்க வ்ருத்தாந்தத்தை ஒருநாள் அறியலாச்சுது. அதாவது, பல மஹான்களின் ப்ரபல ப்ரயத்

னங்களாலே ஸ்ரீரங்கநாதன் அபாய மொன்றுமின்றிக்கே திருவரங்கம் பெரிய கோயில் ஸன்னிதி சேர்ந்தருளினதாகவும் ஸ்ரீமல்லோகாசார்ய ஸ்ரீஸுதர்சந பட்டாரக ப்ரப்ருதிகளான ஆசார்யவர்யர்கள் மீண்டெழுந்தருளாமலே" அங்கங்கே திருநாட்டுக்கெழுந்தருளினதாகவும் கேட்டு "அம்ருதம் விஷஸம்மிச்ரம்" என்று போர நொந்து நெடும் போது இதிகர்த்தவ்யதா முக்தரா யிருந்து, அந்தமட்டில் பெருமாளாகிலும் பாங்காக ஸ்வஸ்தானம் வந்து சேரப் பெற்றதே என்று தேறி பிள்ளைலோகாசார்யாதிகளுக்கு ஸ்ரீசூர்ண பரிபாலனம் நடத்தியருளி நிலையிட வொண்ணாத நிர்வேதத்துடனே மூன்று நாள் உபவாஸமாக எழுந்தருளியிருந்து ஒருவாறு திருவுள்ளத்தை ஸமாஹிதமாக்கி "ஸ்ரீமதி லோகாசார்யே திவம் கதேபி ப்ரஸித்த தச்சிஷ்யா:, ஸந்தி கலு ரங்கநகரே தச்சரணச்சாய மாச்ரிதோஸாநி" [பிள்ளை லோகாசார்யர் திருநாடலங்கரித்தாலும் அவருடைய திருவடி ஸம்பந்திகள் கோயிலிலே வாழ்ந்திருப்பர்களே; அவர்களின் திருவடி நிழலிலே யொதுங்கி வர்த்திக்கக்கடவேன்] என்று பாரித்துக் கொண்டு "ஸ காம மநவாப்யைவ" என்னச் செய்தேயும் "ஆருரோஹ ரதம் ஹ்ருஷ்ட:" என்றுப்போலே ஹர்ஷத்துடனே கோயிலேறப் புறப்பட்டருளியாச்சுது." என்கிற இப்பங்க்திகள் அவ்விடத்திலுள்ளவை. (அதாவது) அந்த ஸ்ரீ கோசத்தின் 11, 12 பக்கங்களிவை. இதற்கு மேலும் பல விடங்கள் எடுத்துக் காட்ட வேண்டியவையுள்ளன; விரிவுக்கு அஞ்சாமல் காட்டுகின்றோம். அதுதன்னிலேயே கோயிலாத்தான் மகனார்ஸன்னிதியிலே திவ்யப்ரபந்தங்களை ஓதி முடித்தது ஈயுண்ணியாழ்வான் திருக்குமாரர் பக்கலிலே அவற்றின் வியாக்கியானங்களை அதிகரித்தது முதலான செய்திகளை விரிவாக எழுதிக் கொண்டு போமடைவில் (பக்கம் 24ல்) "திருப்புன்னையடியில் ஸ்வாமி தேசிகன் அருளிய அர்த்த விசேஷங்கள் என்கிற மகுடத்தின்கீழ்

*த்ரமிட நிகமத்ரஷ்ட்ரா நாதேந யாமுநயோகிநா
யதிந்ருபதிநா கூரேசார்யைஸ் ததா குருகேச்வரை:
புவநகுருபி: க்ருஷ்ணந்வந்த்வேந லம்பிதரக்ஷணே
மம ஹ்ருதி ஸதா ஜீயாத் ஸத்ஸம்ப்ரதாய ஸுசேவதி: —என்றும்.

ஜகத்தேசிகாக்க்யாந் ஸதாசார்யவர்யாந்
ததீயாச் ச ஸூக்தீர் முஹுச் சித்தயித்வா,
ஸதாம் ஸந்நிதாநாத் க்ருஹீதாந் ஸதர்த்தாந்
ஸதாம் சாஸநேநேஹ விஜ்ஞாபயாமி * என்றும்,

ஸ்ரீமல்லோககுரூத்தமாந் குணநிதீந் வித்யாநிதீந் ஸாத்விகாந்
ஆசார்யாந் அஸக்ருத் விசிந்த்ய, பணிதீஸ் தேஷாம் ஸதா சிந்தயந்,

தாஸோ வேங்கடநாதநாமககவி: ஸ்ரீரங்கதாம்நி ஸ்திதாந்
ஏதாந் ஸாத்விக ஸஜ்ஜநாந் மம கிரா ஸம்மோதயே ஸாம்ப்ரதம்.

என்றும் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு ச்லோக ரத்னத்தை முகப்பில் விண்ணப்பஞ்செய்து ஸ்வாமி தேசிகன் ஸ்ரீஸூக்திகளை அமோகமாக அருளிச் செய்யும் படியாயிருந்தது. அலையாருங் கடல் போல் முழங்கியும், கங்கை நீர்ப்பெருக்கோ காவிரிப் பெருக்கோ என்னலாம் படிபெருகியும் விம்மிவெளிவந்த அந்ததிவ்ய ஸ்ரீஸூக்திகளின் காம்பீர்ய ஔதார்யங்களை என்ன வென்பது? நம்பிள்ளையின் புநரவதாரமே ஸ்வாமியென்று ஒரு மிடறாக அனைவரும் அறுதியிட்டார்கள். ஸ்வாமி மட்டும் பிள்ளை லோகாசாரியரையும் அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரையும் ச்ருதப்ரகாசி

காபட்டரையும் ஸாக்ஷாத்தாக ஸேவிக்கப் பெறாத துயரத்தை அடிக்கடி விஜ்ஞாபித்துக் கொண்டிருந்தபடி. அந்தத் துயரத்திற்கு ஒருபரிஹாரமாகவே ஸ்ரீஸூதர்சநார்யவிம்சதியும் ஸ்ரீலோகார்யபஞ்சாசத்துமருளிச் செய்து ஸமாஹிதரானபடி.' என்றெழுதப்பட்டுள்ளது. அதற்கு மேலும்,

> ஸர்வசாஸ்த்ரகபளீக்ருதிக்ஷமம் ந்யாஸதத்வமநகம் ஸதாம் முதே,
> லோகதேசிகபதாப்ஜபாம்ஸுநா வேங்கடேசகவிநா விபோத்யதே.

என்றுதொடங்கி ஒரு ரேவதித் திரு நாளிலே அற்புதமாக அருளிச் செய்ததாக எழுதப்பட்டுள்ளது.

அதற்கு மேலும் (பக்கம் 27ல்)

> "இத்தம் லோகாசார்ய ஸ்ரீபதபங்கஜபராகபரமாணு:
> வேங்கடநாத: ப்ரோசே வேதாந்தார்யஸ் ஸதாம் முதே ஸததம்."

என்று அன்றைய விண்ணப்பத்தைத் தலைக்கட்டியாச்சுது. என்று எழுதப்பட்டுள்ளது. அதற்கு மேலும்,

"ரங்காஸ்தாநவாஸிகளாய் அசேஷசித்த ரஞ்ஜகர்களான ரஸிக வித்வான்கள் சிலர் ஸ்வாமிஸகாசத்திலே விடை கொண்டு நாயமாத்மாச்ருதியின் அர்த்ததத்வத்தை அருள் புரியவேணு மென்று வேண்ட,

> "ஸ்ரீபாஷ்யகாரஸ்ரீஸூக்திதீயான பாவநசேதஸாம்,
> லோகார்யாணும் பதாம்போஜே சிந்தயந் ஸந் நிவேதயே."

என்று முதலிட்டு ஸவிநயம் பணிக்கத் தொடங்கியாச்சுது. என்றும்; மற்றோர்நாள் உபந்யாஸத்திலே

(ச்லோ) ஸ்ரீமத்க்ருஷ்ண ஸமாக்ய தேசிக புகாத் திவ்யப்ரபந்தாவலி
வ்யாக்யாநாநி விசக்ஷணுதி புவநே தாவாதரிஷ்யந் யதி,
ஸத்யம் ஸத்யமிஹாபவிஷ்யத கிலா ஸ்ரீவைஷ்ணவாநாம் கதி:
தௌர்ப்பாக்யோபஹதா யதார்த்த விமலப்ரஜ்ஞாதரித்ராபிச.

என்று விண்ணப்பம் செய்ததாகவும் இப்படி பலபல ச்லோகங்களை ஆத்யப்ரஹ்மதந்திர ஸ்வாமி ஸ்ரீகோசத்திலிருந்து எடுத்துக் காட்டியுள்ளவை ஸ்ரீதேசிகபக்தர்களானஸகல ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் "என்னுடைய நெஞ்சகம் பால் சுவர்வழியெழுதிக் கொண்டேன்" என்று பெரியாழ்வார் பணித்த கணக்கிலே நெஞ்சென்னும் சுவரிலே நன்கு பொறித்துக் கொள்ளத்தக்கவை

அதற்குமேல் (பக்கம் 29ல்) ஒரு மஹாகவி, ஸ்வாமி தேசிகனிடம் வந்து கொக்கரித்து பங்கப்பட்டு ஸ்வாமிக்கு அஷ்டோத்தர சதநாமமாலிகை இயற்றி ஸமர்ப்பித்ததாகச் சொல்லிவருகையில்

> மந்த்ரஜ்ஞோ மந்த்ரரத்னஜ்ஞோ மநீஷீ (80) மாந்யமாநித:
> லோகாசார்யபதாஸக்தோ லோகதேசிகஸூக்திபுக்
> க்ருஷ்ணஸூரிகுணும்போதிமக்ந: க்ருஷ்ணார்யஸேவக:
> ஸ்ரீவாக்பூஷணதத்வஜ்ஞ: ஸம்சோதிதமதிஸ் ஸுதீ:
> ஸதாசார்யபதாஸக்தஸ் ஸச்சிஷ்யகணஸேவித: 90

என்கிற நாமாவளிகள் படிக்கப்பட்டிருக்கின்றன. முடிவில் காட்டிய சரமச்லோகம் இது காணீர்;—

''அப்தே ஸௌம்ய ஸமாஹ்வயே நீநகரே ராசிம் கதே வ்ருச்சிகம்
ரங்காயாம் முநிவாஹநாஹ்வயபுரேஸ் தாரே ப்ருகோர் வாஸரே.
விச்வாமித்ர குலாப்திகௌஸ்துபமணிர் வேதாந்தஸூரிர் மஹாந்
லோகாசார்ய பதாப்ஜ சிந்தந ரதோ லோகம் யயௌ சாச்வதம்'' என்பதாம்.

ஆரியர்களே! த்விதீயப்ரஹ்மதந்த்ரஸ்வாமி பணித்த தேசிக வைபவ நூலைக் கொண்டு நிரூபித்தவை போதும். ஸமீபகாலத்தில் ஸ்ரீ மான் V. P. ரங்காசாரியர் வெளியிட்ட ஆண்டவன் திருவருளென்னும் நூலில் இது பற்றியுள்ளவற்றை யுதாஹரித்து இக்கட்டுரையைத் தலைக்கட்டுகிறேன். அதில்(பக்கம் 25ல்) வெளிவந்துள்ளதாவது—

" 38. முகப்பில் ஸ்ரீ தேசிகன் திருக்கோலமமைத்து அதன்கீழ் "ஸ்ரீ மாந் வேங்கடநாதார்ய தனியனை யெழுதியுள்ளீர். இது ஸ்வரூபாநுரூபம். இதற்குக் கர்த்தா இன்னாரென்று எழுதிற்றிலீர். அதன்கீழ் "சீரொன்று தூப்பில்' என்றொரு செய்யுளையிட்டு அதன்கீழ் "பிள்ளைலோகாசார்யர்" என்று எழுதியுள்ளீர். இந்தப் பாட்டு அவ்வாசிரியர் பணித்ததென்று உமது கருத்துப்போலும். வைணவர்கள் தனியனென்று வழங்குவதைத் தமிழர்கள் சிறப்புப்பாயிரமென்பர். இப்பாயிரம் இயம்புதற்கு இன்னாரின்னார் உரியரென்று காட்டவந்த நன்னூலாசிரியர்

''தன்னாசிரியன் தன்னொடு கற்றோன்
தன்மாணுக்கன் தகுமுரை காரனென்று
இன்னோர்பாயிர மியம்புதல் கடனே''

என்றொரு சூத்திரம் வகுத்துள்ளார். தனியனியற்றுவதற்கு ஆசார்யனையே முதல் உரிமையாளராகக் காட்டியுள்ளார். பிள்ளைலோகாசாரியர் தேசிகனுக்கு ஆசார்யரென்னும் முறையில் தனியனிட்டால் இஃது அஸம்பாவிதமன்று. அந்த பாக்கியம் தேசிகனுக்குக் கிடைக்கவில்லையென்று த்விதீய ப்ரஹ்மதந்த்ரஸ்வாமி யெழுதிய தேசிகவைபவத்தினால் விளங்கியுள்ளது. தேசிகன் பிள்ளைலோகாசாரியார் திருவடிகளில் ஆச்ரயித்து விமல மநஸ்கராக வேணுமென்கிற பாரிப்புடன் கோயிலுக்கெழுந்தருளினபோது, பிள்ளைலோகாசாரியர் ச்ருதப்ரகாசிகாபட்டர் முதலானார் நம்பெருமாளை யெழுந்தருளப் பண்ணிக்கொண்டு வெளியேறியிருக்குஞ் செய்தியைக் கேள்விப்பட்டுத் துடிதுடித்துப் பல சுலோகங்களும் செய்யுள்களும் பாடிப் புலம்பிவிட்டு மைஸூர் ப்ராந்தம் சென்றுவிட்டதாக இதிஹாஸமெழுதியுள்ளார். ஆகவே பிள்ளைலோகாசார்யரை தேசிகனுக்கு ஆசார்யராகச் சொல்ல ஔசித்யமில்லையே. ஸ்வாமி தேசிகன் ஸச்சரித்ர ரக்ஷையில் "கரியமேனிமிசை" என்கிறதிருவாய்மொழிப் பாசுரத்தின் பொருளை விவரிக்கவேண்டிய அவசியம்நேர்ந்து. பெரியவாச்சான்பிள்ளை ஸாதித்தபடியே விவரித்து• "இதி ஆசார்ய:" என்றருளியிருக்கையாலே தேசிகனுக்குப் பெரியவாச்சான்பிள்ளையை ஆசார்யராகக் கொள்ள நிரம்பிய ஔசித்யமுள்ளது. அவர்தாம் இத்தனியனை இட்டிருக்கலாமென்னப்பார்த்தாலோ இதுவும் ஏலாததாகவுள்ளது. ஏனெனில்; ஏறக்குறைய முந்நூறு வருஷங்களுக்கப்பால் ஏற்பட்ட தாய், திருத்தண்காவின் பரிஸரத்திலுள்ளதான தூப்பில் என்னும் அக்ரஹாரத்தின் கொச்சைப் பெயரான தூப்பில் என்னுஞ்சொல் இச்செய்யுளில் புகுந்திருக்கையாலே, தும்பைவனம் சொக்கலிங்காசாரி செய்தசெய்யுள் இதுவென்று ஆராய்ந்து முடிவு செய்தார்கள்." என்றுள்ளது. இங்ஙனே உதாஹரிக்க வேண்டியவை பலவுண்டு.

சிலபலவருடங்களுக்கு முன் ஸ்ரீ உ. வே. புதுக் கோட்டை ஸ்ரீநிவாஸராகவா
சாரியார் M. A. அவர்கள் தேசிக சில்லரை ரஹஸ்யங்களையச்சிடுகையில் அதில் இந்த
*சிறொன்று தூப்பில் பாடலையும் சேர்த்து அச்சிட்டிருந்தார். அப்போது அவர் நமக்
குப் பரமஸ்நிக்தராயிருந்த படியால் "இந்தப் பாட்டை நீர்ஸம்பாதித்து வைத்துக்
கொண்டிருக்கும் ஓலைச்சுவடிகளில் ஒன்றிலாவது கண்டதுண்டோ? உள்ளபடி
யெழுத வேணும்" என்று அவர்க்கு எழுதியிருந்தோம், எதிலுங் கண்டதில்லை
யென்று விடையிறுத்து நின்றார். பிறகு அவர் காஞ்சிக்கு வரும் போதுகளில் காட்சி
தராமலே போவர்.

இதுகாறும் உத்தமூர் தேசிகருடைய கட்டுரையின் கடைப்பகுதியை மட்டும்
ஆராய்ந்தோம்; பொதுவாகக் கட்டுரையின் வைகரியை விமர்சிக்குங்கால், கல்யாணங்
களில் புரோஹிதர்கள் அநுக்ரஹம் சொல்வதென்று தொடங்கி, "இமௌதம்பதீ"
என்றாரம்பித்து "நிரந்தரம் ச்ரேய:ப்ரதோ பூயாதிதி மஹாந்தோநுக்ருஹ்ணந்து"
என்றும், "ஏநயோர் தம்பத்யோ: என்றாரம்பித்து ... பூயாஸ்தாமிதி பவந்தோ
மஹாந்தோநுக்ருஹ்ணந்து" என்றும் முடிப்பர்களே அதுதான் நினைவுக்கு வருகிறது.
"ஆண்டாளும் தேசிகனும்" என்பது கட்டுரையின் மகுடம்; அதற்குச் சேர ஆண்டாள்
பெருமையை தேசிகன் அநுபவித்த ப்ரகாரங்களை கோதாஸ்துதி கொண்டு விளக்கப்
புக்கால் வாசிப்பவர்கள் பர்யாப்தி பெறவொண்ணுதபடி பக்கங்கள் ஐம்பதும் அறு
பதுமாக எழுதிப் போகலாம்; அல்லது தேசிகன் பெருமையை ஆண்டாள் ஸூசிப்பித்த
படியை திருப்பாவையில்ஏதேனு மொருபாசுரங் கொண்டு உலகம் வியக்க விவரிக்
கலாம். ஸ்ரீ ராமாயணம் சொல்லுகிறேனென்று ஆரம்பித்து, "ராமாயணம் வால்
மீகி இயற்றியது; வால்மீகியென்றால் புற்றில்பிறந்தவரென்று பொருள். புற்றானது
பாம்புகளுக்கு உறைவிடம். பாம்புகளில் பல ஜாதிகளுண்டு தண்ணீர்ப் பாம்பும்
பாம்புதான். அது ஒன்றும் செய்யாது. ஸர்ப்பம் கடித்தால் மிகவும் அபாயம் அதற்கு
மருந்தே கிடையாது. உலகில் மருந்துகடைகள் ஏராளமாயிருக்கின்றன ஆனால் மருந்து
விற்பனை செய்ய ஸர்க்காரின் லைசன்ஸு வாங்க வேண்டும். பழைய காலத்து மருந்து
கள் இப்போது கிடைப்பதில்லை. இறந்தகாலம் நிகழ்காலம் எதிர்காலமென்று காலம்
மூன்றுவிதம். பழையகால மென்பது இறந்த காலத்தைச் சேர்ந்தது. இறந்தவர்களைப்
பற்றி நாம் சிந்திக்கவே கூடாது. "ஜாதஸ்ய ஹித்ருவோம்ருத்யுர் த்ருவம் ஜந்ம ம்ரு
தஸ்ய ச, தஸ்மா தபரி ஹார்யேர்த்தே நத்வம் சோசிதுமர்ஹஸி" என்று பகவத் கீதை
யிலே சொல்லப் பட்டது. கீதையென்பது உயர்ந்த சாஸ்த்ரம். கோரக்பூரில் கீதையைப்
பல விதமாக அச்சிட்டிருக்கிறார்கள் ... ... என்றிப்படி சொல்லிக் கொண்டே
போவர்கள். கேட்பவர்கள் மெய் மறந்து கேட்பர்கள். அதுவேநினைவுக்குவருகின்றது.
ஆண்டாள் பெருமையும் சொன்னபாடில்லை. தேசிகன் பெருமையும் சொன்ன
பாடில்லை. வாக்கிபங்களோ ஸர்வாத் மநா அநந்விதங்களும் அசடுவழியுமவையும்.
இதைப் பாருங்கள்;

" ஆசார்யர்கள் செய்ய வேண்டிய தென்ன வெனில் சுறந்த ஸித்தாந்த
த்திற்கான க்ரந்தங்களை ப்ரசாரம் செய்து அவற்றில் ஆழ்ந்த பொருள்
களைப்போல உரைகளிட்டுந் தெளிவுப்படுத்தி"

என்றெழுதிக் கொண்டு போகிறார். சுறந்த ஸித்தாந்த மென்றால் என்னவோ? சிறந்த என்பதன் அச்சுப்பிழை என்று சொல்லி விடலாம். இது கிடக்கட்டும்? அவற்றின் ஆழ்ந்த பொருள்களைப் போல உரையிடுவதாவ தென்னவோ? சிறிது மேலே போவோம்? " ஆண்டாள் ... ... கண்ணனைக் கணவனாகப் பெற விரும்பியிருந்ததை அறிவித்ததுடன் நாராயண பாரம்யத்தையும் திருவஷ்டாக்ஷரம் த்வயம் சரமச்லோகம் என்ற இரஹஸ்யங்களின் பொருளையுங்கூறி ஆசார்யமுகமாக எல்லாம் பெற்று பஞ்சகாலப்ரக்ரியையாக ஆன்மீகத்தை எம்பெருமானுடைய ஆராதனமாக நடத்திக்கொண்டு — — இது கோமூத்ரம் போலே நெடுகப் போய்க் கொண்டிருக்கிறது. (திருப்பாவையில் செவ்வனேகுறந்திருக்கிறாள் என்று முடிவாம்,) இந்த வாக்கிய ராசியில் ஆன்மீகத்தை ஆராதனமாக நடத்துவதென்று ஒன்று காணப்படுகிறது. ஆன்மீக மென்பது வடமொழியுமன்று தென்மொழியுமன்று. இக்காலத்தவர்கள் இப்படி அர்த்தமில்லாத சில சொற்களை எழுதிப் போருவதும் பிரசங்க மேடைகளில் பேசுவது முண்டு. [ராஜரீகம் இத்யாதிவத்.] திருப்பாவையில் திருவஷ்டாக்ஷரார்த்தம் இன்னின்ன விடங்களிலுள்ளது; த்வயார்த்தம் இன்னின்ன விடங்களிலுள்ளது, சரமச் லோகார்த்தம் இன்னின்ன விடங்களிலுள்ளது என்று நிரூபித்து ரஸிகர்களை யுகப்பிக்க பாக்கியமில்லையே. அதற்கு இட்டுப்பிறக்க வில்லையே,

" ஆண்டாள் கண்ணனைக் கணவனாகப் பெற விரும்பியிருந்ததை அறிவித்ததுடன்" என்கிறாரே; திருப்பாவை நடையாடுமிடத்திலுள்ளார் எழுதும் வார்த்தையா இது? நாச்சியார் திரு மொழியில் "மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்" " கொங்கைத் தலமிவை நோக்கிக் காணீர் கோவிந்தனுக்கல்லால் வாயில் போகா" என்றிவை முதலான சில பாசுரங்களுண்டு . திருப்பாவையில் அப்படி ஓரெழுத்துமில்லை.

இராக்ஷஸர் என்பதும் இரஹஸ்யம் என்பதும் பரிஹாஸ்யம். ராக்ஷஸரில் (இ) சேர்க்கவேணுமானால் இராக்கதர் என்ன வேணும். ரஹஸ்யத்தில் (இ) சேர்க்க வேணுமானால் இரகசியம் என்ன வேணும். மணற்சோற்றில் கல் ஆராய்கிறோமே யென்று வெள்கி நிற்கிறேன்.

இதற்கு மேல் சாகாசங்க்ரமணந்யாயேந " பகவத் விஷய கால க்ஷேபத்தையும் அதற்கென்று தனியே ஒரு தனியன் பெறுமளவுக்கு ப்ரபலமாக நடத்தியருளி" என்கிறார். ஸ்வாமி நடத்தின பகவத் விஷயகாலக்ஷேபம் எதுவோ? அதற்கென்று தனியே ஒரு தனியன் பெறுமளவானது' என்னே? * சீரோன்று தூப்பல் தானே? அல்லது, அவதார ஸ்தலத்திலுங் கூட அணுகலாகாதென்று நீதிமன்றங்கள் தோறும் விலக்குண்ட வொருசுலோகமா? நிகமபரிமலப்ரஸங்கம் போலே அத்தனியன் ப்ரஸங்கமும் லஜ்ஜாவஹமாயிற்றுப் போலும்,

சுஷ்கவாசாம் விமர்சேந வ்ருதா காலஸ்ய யாபநம்,
இதோபி மாபூத் இத்யேவ விரம்யாந்யத் விசிந்த்யே.

கதா: கல்பநிகா: ப்ரோச்ய பாமராணாம் ந்ருணாம் வ்ருதா,
விப்ரலம்பே ருசிர் மாபூத் விசிஷ்ய மயி ஜீவதி

இத்தமண்ணங்கராசார்ய: பரமார்த்த ப்ரகாசக:,
அஸமஞ்ஜஸவாக்யாநாம் விமர்சம் பர்யபூரயத்.

---

8-1-72 ல் சென்னை கவர்னர் K. K. ஷா. சந்திப்பு.



ஸ்ரீரஸ்து.

# உபந்யாஸக ஸௌபாக்யமாலையில்

## பதினைந்தாவது ஸ்தபகம்.

— P. B. அண்ணங்கராசாரியர் —

### ஆழ்வார்களனுபவித்த ஸ்ரீ க்ருஷ்ண திவ்ய சேஷ்டிதங்கள்.

கண்ணபிரானுடைய திவ்ய சரித்திரங்கள் ஸ்ரீ விஷ்ணு புராணம் ஸ்ரீபாகவதம் மஹாபாரதம் ஹரிவம்சம் கர்க்கஸம்ஹிதை முதலானவற்றில் அபரிமிதமாக இருந்தாலும் நம்முடைய ஆழ்வார்கள் தமது திவ்யப்ப்ரபந்தங்களில் அநுபவித்திருக்கும் சரிதைகளை மட்டும் ஈண்டெடுத்து விவரிக்க ஆசைகிளர்கின்றது. பகவத் கீதையில் நான்காவது அத்யாயத்தில் *ஜந்ம கர்ம ச மே திவ்யம் ஏவம் யோ வேத்தி தத்த்வத:. த்யக்த்வா தேஹம் புநர் ஜந்ம நைதி மாமேதி ஸோர்ஜுந!* என்று கண்ணபிரான் தானே அருளிச் செய்ததை நோக்கவேணும். 'நான் பிறந்த வாற்றையும் வளர்ந்தவாற்றையும் உள்ளபடி யாவனொருவன் அறிகின்றானோ அவன் மறுபிறப்பின்றி என்னையேயடைந்து நித்யாநந்த மெய்துகின்றான்' என்பது மேற்குறித்த ச்லோகத்தின் பொருள். ஆகவே நம்முடைய உஜ்ஜீவநோபாயங்களில் கண்ணபிரானுடைய திவ்ய சரிதைகளைச் சிந்தனை செய்வதே தலைமைபெற்றிருக்கும். அந்த திவ்ய சரிதங்களில் * தேனுகன் பிலம்பன் காளியனென்னுந் தீப்பப்பூடுகளடங்கவுழக்கி * என்ற பெரியாழ்வாரருளிச் செயலின்படியும் * காட்டைநாடித் தேனுகனும் களிறும்புள்ளுமுடன்மடிய வேட்டையாடி வருவான் * என்ற ஆண்டாளருளிச் செயலின்படியும் விரோதிவர்க்கங்களைக் கிழங்கெடுத்த சரிதைகளே அதிகமாயிருக்கும். கூரத்தாழ்வான் அதிமாநுஷஸ்தவத்தில் *யஃ கம்ஸ முக்கபந்நப கீடநிப்ஹனேத்தா ஸா நிர்ஜித த்ரிஜகதஸ் தவ நைவ கீர்த்தி:* என்றச்லோகத்தில் 'கம்ஸன் முதலிய க்ரிமிகீடங்களை ஸர்வ சக்தனான கண்ணபிரான் நசுக்கினனென்கிறவிது அவனுக்கு ஒருபுகழோ? அல்ல; பராத்பரனான அவன் *திவத்திலும் பசுநிரை மேய்ப்பு உவத்தி *கன்றுமேய்த்தினிதுகந்த காளாய்!* என்னும்படி ஆநிரை மேய்த்ததொன்றே சிந்தனைக்கினிது' என்றாராகிலும், அவர்தாமே அடுத்த ஸுந்தரபாஹுஸ்தவத்தில் *இங்கிதம் நிமிஷிதஞ் ச தாவகம் ரம்யம் அத்புதம் அதிப்ரியங்கரம், தேந கம்ஸமுக கீட சாஸநம் ஸுந்தரால்பகமபி ப்ரசஸ்யதே* என்றாராதலால் 'அப்பெருமான் செய்த செயல்' என்கிற காரணத்தினால் எப்படிப்பட்ட சிறுச்சேவகமும் சிந்தனைக்கு உரியதும் இனியதுமேயாமென்று கொண்டு ✳ இமையோர் தமக்கும் நெஞ்சால் நினைப்பரிதால் வெண்ணெயூணென்னுமீனச் சொல்லே * மத்துறு கடைவெண்ணெய்களவினிலுரவிடை யாப்புண்டு எத்திறமுரலினோடிணைந் திருந்தேங்கிய வெளிவே!* என்று நவநீதசௌர்யத்திலே கூள்குழைந்த ஆழ்வாரும் *ஏறுபாய்ந்தது, மாயமாவினை வாய்பிளந்தது, பேய்முலையுண்டது, சாடிறுத்தது, புள்வாய் பிளந்தது, களிறட்டது முதலியவற்றையும் பலகால்பேசி ✳ அதுவிதுவுது வென்னலாவனவல்ல. என்னையுன் செய்கை நைவிக்கும் * என்று பேசிப் போந்தார். ஆகவே அப்பெருமான் செய்தருளின விரோதி நிரஸநச் செய்கைகளையும் விடாது அனுபவிப்போம். ... *

## தந்தைகாலில்விலங்கற வந்துதோன்றியது.

பூமிதேவிக்குத் தன்மீது ஸஜ்ஜனங்கள் எத்தனை கோடிக்கணக்காக இருந்தாலும் அவர்களைச் சுமப்பது இலவம்பஞ்சைச் சுமப்பதுபோல் வருத்தமற்றிருக்கும். ஒரு துஷ்டனுண்டாகிலும் இரும்பு மூட்டையைத் தாங்குவதுபோல் மிகவருத்தமாம் ஆதலால், த்வாபரயுகத்தில் இப்பூமியின் கண் பிறந்திருந்த கம்ஸன் சிசுபாலன் முதலிய அஸுரர்களின் பாரத்தைப் பொறுக்கமாட்டாமல் பூமிப்பிராட்டி கோரூபத்தைத் தரித்துமேருமலையினுச்சியிலுள்ள தேவர்களின் ஸபையை அடைந்து, அச்சபை நடுவில் வீற்றிருக்கும் நான்முகனை வணங்கித் தனது துயரத்தை முறையிட்டு இவ் வஸுரர்களைத் தொலைத்துத் தன்னை ஸுகப்படுத்தவேணுமென வேண்டிக்கொள்ள, அதற்கு நான்முகன் சிறிது காலம் யோசித்து இது நம்மாலாகாது; ஸர்வஜ்ஞனும் ஸர்வசக்தனும் ஸர்வலோக பிதாவாகிய ஸ்ரீமந்நாராயணனுக்கு அறிவித்து அவர் மூலமாக இக்கார்யத்தை நிறைவேற்றுவிக்கவேணும்' எனக்கருதி அந்தப் பூமியையும் மற்றுமுள்ள தேவர்களையுங் கூட்டிக்கொண்டுபோய்ப் பாற்கடலுள்பள்ளிகொள்கின்ற பரமனைத்தொழுது துதித்தனர். பின்பு திருமால் அருள் புரிந்த சிந்தைகொண்டு அவர்கட்குக் காட்சி தந்து யோகக்ஷேமங்களை விசாரித்து அவர்கள் வந்த வரலாற்றை உணர்ந்தருளி, "ஓ தேவர்களே! உங்கள் கருத்தை அறிந்துகொண்டேன். முற்காலத்தில் வருணனுடைய சாபத்தினால் கச்யபரும் அவரது மனைவியான அதிதியும் இப்பொழுது வஸுதேவ தேவகிகளாகப் பிறந்திருக்கின்றனர்; இப்பிறவியில் அவர்களுக்கு நான் பிள்ளையாகப் பிறக்கின்றேனென்று முன்பு வரமளித்திருக்கிறேன்; அங்ஙனமே நான் அவர்களுடைய கர்ப்பத்தில் தோன்றி ஸாதுபரித்ராணமும் துர்ஜநவிநாசமும் தரும ஸம்ஸ்தாபநமும் செய்யக் கடவேன்; நீங்கள் போகலாம்" என்று சோதிவாய் திறந்து அருளிச்செய்ய; அவர்கள் பரமாநந்தத்துடன் விடைபெற்றுத் தத்தம் ஸ்தானங்களை அடையலாயினர். அக்காலத்தில் மதுராநகரத்தில் யதுவம்சத்தாரில் உக்ரஸேநன் என்றொரு தார்மிகன் அரசனாயிருந்தான்; அவனது மகன் கம்ஸனென்பான். இக்கஞ்சன் துஷ்டர்களில் தலைவனாயிருந்துகொண்டு பெரியோர்கட்குத் தீமையும் புல்லியர்கட்கு நன்மையும் செய்துகொண்டு தன் பலத்தினால் தனது தந்தையாகிய உக்ரஸேநனைச் சிங்காதனத்தினின்று தள்ளிவிட்டுத் தான் அரசாண்டு வருங்காலத்து; கம்ஸன் தனது உடன் பிறந்தவளாய் யுக்தவயது வாய்ந்தவளான தேவகியை வஸுதேவருக்கு விவாஹம் செய்வித்து அவ் விவாகம் முடிந்த பின் அவளை வஸுதேவர் மாளிகையிற்கொண்டு விடுகைக்காகத் தேரேற்றிக் கொண்டு தான் தேவகியிடத்தில் மிக்க அன்பு ஆதரத்துடன் ஸாரதியாயிருந்து தேரை நடத்திக்கொண்டு வரும்போது, ஆகாயத்தில் "ஓ! அறிவுகேடனே! நீ யாரிடத்தில் அன்பு பூண்டிருக்கின்றனையோ, அத்தேவகியின் எட்டாவது கர்ப்பம் உன்னைக் கொல்லப்போகிறது" என்று அசரீரவாக்குப் பிறக்க, அதனைக்கேட்ட கம்ஸன் மிகவும் திடுக்கிட்டு, 'இனி நாம் தப்பும் வழி யாது?' என்று யோசித்து, 'இத்தேவகி பிழைத்திருந்தாலன்றோ இவளது எட்டாவது பிள்ளை நம்மைக் கொல்லப்போகிறது; இப்போதே இவளைக் கொன்று விடுவோம்' என்றறுதியிட்டுக் கத்தியை உருவிக்கொண்டு தேவகியைக் கொலைசெய்யப்புக, வசுதேவர் அவனுக்குப் பல தருமங்களையும் காலகதியையும் பரக்க உபதேசிக்கவும் அவன் அதை மதியாமல் ஒரே பிடிவாதமாய் நிற்க, பின்பு வஸுதேவர் நல்லுபாயமாக "அப்பா! உனக்கு இவள்கையால்

சாவு இல்லையே; இவளுடைய பிள்ளை கையினாலல்லவோ சாவுநேரிடப்போகிறது; இவளுக்குப் பிள்ளை பிறந்தவுடன் அப்பிள்ளைகளை உன்னிடம் கொடுத்துவிடுகிறேன், நீ அவற்றைக் கொன்றுவிடு" என்று சொல்ல; கம்ஸன் அதை யுக்தமென்று கொண்டு அந்தம்பதிகளை விலங்கிட்டுச் சிறையிலடைத்திட்டான். திருமால் தேவகியிடம் எட்டாவது கர்ப்பத்தில் [ஆவணி மாதம் க்ருஷ்ணாஷ்டமி கூடிய ரோஹிணீ நக்ஷத்திரத்தில் இரவு விருஷபலக்கினத்தில்] ஸ்ரீகிஷ்ணனாய் அவதரிக்க, அப்போதே வசுதேவ தேவகிகளின் கால்விலங்கு இற்று முறிந்து விழுந்தொழிந்தது. அப்போதே வஸுதேவர் கண்ணபிரானைக்கொண்டுசென்று திருவாய்ப்பாடியில் நந்தகோபர் திருமாளிகையில் ஸுரக்ஷிதனாயிருக்கும்படி விட்டுவந்தார். .... ... *

### பேய்ச்சி முலைசுவைத்துச் சகடத்தைச்சாடி மருதிறுத்தது.

ஒருத்திமகனாய்ப் பிறந்து ஓரிரவிலொருத்திமகனா யொளித்து வளர்கின்ற ஸ்ரீ கிருஷ்ண சிசுவை நாடியுணர்ந்து கொல்லும்பொருட்டுக் கஞ்சன் பல அசுரர்களை ஏவ, அவர்களில் ஒருத்தியான பூதனையென்னும் ராக்ஷஸி நல்ல பெண்ணுருவத்தோடு இரவிலே திருவாய்ப்பாடிக்குவந்து, அங்குத் தூங்கிக்கொண்டிருந்த கிருஷ்ணசிசுவை யெடுத்துத் தனது நஞ்சு தீற்றிய முலையைக் கொடுத்துக் கொல்ல முயல,பகவானாகிய குழந்தை அவ்வரக்கியின் ஸ்தனங்களைக் கைகளால் இறுகப்பிடித்துப் பாலுண்கிற பாவனையிலே அவளுயிரையும் உறிஞ்சி அவள் பேரிரைச்சலிட்டுக் கதறி உடம்பு நரம்புகளின் கட்டெல்லாம் நீங்கி விழுந்து இறக்கும்படி செய்தருளினன். .... .... ... நந்தகோப கிருஹத்தில் ஒரு வண்டியின் கீழ்புறத்திலே கண்ணனைத் தொட்டிலிட்டுக் கண்வளர்த்தி யசோதை யமுனை நீராடப்போனாள். கம்ஸனால் ஏவப்பட்ட அசுரனொருவன் அச்சகடத்தில் வந்து ஆவேசித்து ஸ்ரீ கிருஷ்ண சிசுவின்மேலே விழுந்து கொல்லமுயன்றதை அறிந்த அப்பகவான், பாலுக்கு அழுகின்றபாவனையிலே தன் சிறிய திருவடிகளை மேலேதூக்கி உதைத்தருள, அவ்வுதைபட்ட மாத்திரத்தில் அச்சகடு திருப்பப்பட்டுக் கீழேவிழுந்து அசுரனுட்பட அழிந்தது. .... .... ....

குழந்தைப் பருவமுள்ள கண்ணன் துன்பப்படுத்துகின்ற பல விளையாடல்களைச் செய்யக்கண்டு கோபித்த யசோதை கிருஷ்ணனைத் திருவயிற்றிற் கயிற்றினாற் கட்டி ஒருரலிலே பிணித்து விட, கண்ணன் அவ்வுரலை இழுத்துக் கொண்டு தவழ்ந்து அங்கிருந்த இரட்டை மருதமர [யமளார்ஜுன]த்தின் நடுவே எழுந்தருளியபொழுது அவ்வுரல் குறுக்காய் நின்று இழுக்கப்பட்டபடியினாலே அம்மரங்களிரண்டும் முறிந்து விழுந்தவளவில், முன் நாரதர் சாபத்தால் அம்மரங்களாய்க்கிடந்த நளகூபரன் மணிக்ரீவன் என்னும் குபேர புத்திரர் இருவரும் சாபந்தீர்ந்து சென்றனர். .... *

### கண்ணன் வாயினில் வையமேழுங்கண்டது.

ஒருநாள் கண்ணன் வீதியில் விளையாடிக்கொண்டிருக்கையில் பலராமன் வந்து 'அம்மா! கிருஷ்ணன் மண்ணைத்தின்கின்றான்' என்று சொல்லக்கேட்ட யசோதை ஓடிப்போய்க் கண்ணனை வாரி 'யெடுத்துக்கொண்டு உள்ளே வந்து ஏன் மண்ணைத்தின்றாய்? என்று வெருட்ட, அதற்குக்கண்ணன் 'அம்மா நான் மண்ணைத் தின்னவில்லை; பலராமன் என்மேல் வீணாகக் கோள் சொல்லுகிறான். வேணுமாகில் என் வாயைப் பார்' என்று தன் வாயைத்திறந்து காட்ட, யசோதை அவ்வாய் வழியாக அவனுடைய திருவயிற்றில் ஏழு குலபர்வதங்களையும் கடல்களையும்

ஏழு தீவுகளையுமுடைய இப்பூமி முழுவதையுங்கண்டு "இவன் ஆயர் புத்திரனல்லன் அருந்தெய்வம்" என்று நிர்ணயித்துப் பின்னையும் சிறிதுநேரத்தில் அந்த புத்தி மாறித் தன்னுடைய பாலனுகவே யெண்ணிக் கண்ணனை யெடுத்து முத்தமிட்டாள்.
*ஐய நாவழித்தாளுக்கு அங்காந்திட வையமேழும் பிள்ளைவாயுள் கண்டதுமுண்டு.

## காளியனுச்சியில் நட்டம்பாய்ந்தது.

இப்படி யிருக்கையில் ஒருநாள் கிருஷ்ணன் கன்றுகளை ஒருவரும் ஸஞ்சரியாத வழியே போக்கத்தொடங்க, மற்ற இடைப்பிள்ளைகள் அழைத்து 'கிருஷ்ண! அவ்வழி நோக்கவேண்டா; அவ்வழியிற் சென்றால், யமுநாநதியில் ஓர்மடுவில் இருந்து கொண்டு அம்மடு முழுவதையும் தன் விஷாக்நியினற் கொதிப்படைந்த நீருள்ள தாய்ப் பானத்துக்கு அநர்ஹமாம்படிசெய்த காளியனென்னும்கொடிய ஐந்தலை நாகம் குடும்பத்தோடும் வாஸஞ்செய்துகொண்டு அணுகினவர்களனைவரையும் பிணமாக்கி விடுதலால் நாங்கள் அஞ்சுகின்றோம்' என்ன; அதைக்கேட்ட கண்ண பிரான் உடனே அக்காளிய நாகத்தைத் தண்டிக்கவேண்டுமென்ற திருவுள்ளங் கொண்டு அம்மடுவிற்குச் சமீபத்திலுள்ளதொரு கடம்பமரத்தின் மேலேறி அம்மடு விற் குதித்து, கொடிய அந்நாகத்தின் படங்களின்மேல் ஏறித் துவைத்து நர்த்தனஞ் செய்து நசுக்கி வலியடக்குகையில், மாங்கலிய பிக்ஷை இட்டருளவேண்டுமென்று தன்னை வணங்கிப்பிரார்த்தித்த நாககன்னிகைகளின் விண்ணப்பத்தின்படி அந்தக் காளியனை உயிரோடு கடலிற்சென்று வாழும்படி விட்டருளினன். .... ... *

## தேனுக, அரிஷ்டநேமி, பகாசுர பங்கங்கள்

ஒருநாள் கண்ணபிரான், பலராமனோடும் ஆயர் சிறுவர்களோடும் ஆநிரை மேய்த்துக்கொண்டு பழங்கள் அழகாக மிகுதியாய்ப் பழுத்து வாஸனை வீசிக்கொண் டிருந்த ஒரு பனங்காட்டையடைந்து அப்பனம்பழங்களை விரும்பி உதிர்த்துக் கொண்டு வருகையில், அவ்வனத்துக்குத் தலைவனும் கம்ஸன் பரிவாரத்தில் ஒருவனு மாகிய கழுதை வடிவங்கொண்ட தேநுகாஸுரன் கோபமூண்டு ஓடிவந்து எதிர்த்துப் போர்செய்ய, உடனே கண்ணன் அதிலாகவமாய்ப் பின்னங்காலிரண்டையும் பற்றி அவ்வசுரக் கழுதையைச் சுழற்றி உயிரிழக்கும்படி பனைமரத்தின்மேல் எறிந்து அழித்து, பிறகு எல்லாருமாய் அங்குள்ள இனிய கனிகளை அருந்திப் பொழுதுபோன வாறே வீடுபோய்ச் சேர்ந்தனர். ... ... ... ஒருநாள் கம்ஸனேவலேவப்பட்ட அசுரர்களில் அரிஷ்டனென்பவன் எருது வடிவங்கொண்டு பசுக்களையெல்லாம் முட்டி இடைச்சேரியைப் பயப்படுத்திக்கொண்டு, ஸ்ரீ கிருஷ்ணனது திருவயிற்றின் மேற் கண்வைத்துக் கொம்புகளை நீட்டிப் பாய்ந்துவர, கண்ணபிரான் அவனைக் கொம்பு களிற்பிடித்து அசையவொட்டாமற் செய்து தன்காலினால் அவனது வயிற்றிலே ஓரிடி இடித்து அவன் கழுத்தைப் பிடித்துக் கசக்கி அவனுடைய கொம்பு களில் ஒன்றைப் பறித்து அதனலேயே அவனை அடித்துக் கொன்றனன். ஒருநாள் பகன் என்னும் ஓரஸுரன் கொக்குவடிவங்கொண்டு கண்ணபிரானைக் கொல்வதாக நெருங்கிவர, அப்பொழுது கண்ணன் அப்பறவையின் வாயலகுகளை இருகையாலும் பிடித்துக்கிழித்து அதனை அழித்தனன். ... .... *

**குருந்தொசிந்துங் கன்றினால் விளவெறிந்து, நன்றெறிந்துங் கோநிரைகாத்தது.**

ஒருநாள் வேறொரு அஸுரன், கண்ணபிரான் மலர்கொய்வதற்பொருட்டு விரும்பியேறும் குருந்தமரத்திற் பிரவேசித்து அப்பெருமான் வந்து தன்மீது ஏறும் போது தான் முறிந்துவீழ்ந்து அவனை வீழ்த்திக்கொல்லக் கருதியபோது, மாயவனை கண்ணபிரான் அம்மரத்தைக் கைகளாற் பிடித்துத் தன்வலிமை கொண்டு முறித்து அழித்தனன். .... .... .... கம்ஸனாலேவப்பட்ட அசுரர்களில் கபித்தாசுரன் விளாமரத்தின் வடிவமாய், கண்ணன் தன்கீழ் வரும்பொழுது மேல்விழுந்து கொல்வதாக எண்ணிவந்து நிற்க, அதனையறிந்து கிருஷ்ணபகவான் அவ்வாறே தன்னை முட்டிக்கொல்லும்பொருட்டுக் கன்றின் வடிவங்கொண்டு வந்த வத்ஸாஸுரனைப் பின்னிரண்டு கால்களையும் பிடித்து எடுத்துச் சுழற்றி விளாமரத்தின்மேல் எறிய, இருவரும் சிதைந்து தமது அசுரவடிவத்துடனே விழுந்து இறந்தன. இதுமுள்ளைக் கொண்டே முள்ளைக் களைவது போலாம். ... ... ... ... *

கண்ணபிரானுடைய அதிமாநுஷ சீலவ்ருத்த வேஷங்களைக் கண்டு ஆயர் களனைவரும் ' இவனே நம் குலக்கொழுந்து, இவன் கட்டளைப்படியே நாம் ஒழுக வேண்டும்' என்று அறுதியிட்டனர். இங்ஙனமிருக்கையில் சரத்ருது வந்தது. அப்போது இடையர்கள் வருஷந்தோறும் நடத்துவதுபோல் வழக்கப்படி இந்திரனுக்குப் பூஜைசெய்யப் பற்பல வண்டிகளில் சோறும் தயிரும் நெய்யும் காய்கறிகளும் மற்றுமுள்ள பூஜாத்ரவ்யங்களுமாகிய இவைகளைச் சேகரிப்பதைக் கண்டு கிருஷ்ணன் 'பெரியோர்களே ! நாமும் நம்முடைய பசுக்களும் எதனால் ஜீவிக்கிறோமோ அதற்கே பூஜைசெய்வது தகுதி ; இக்கோவர்த்தனகிரியே பசுக்களுக்குப் புல்லும் தண்ணீரும் கொடுத்துக் காப்பாற்றுகின்றது ; இந்திரனால் நமக்கு என்ன பயனுண்டு? ஒன்றுமில்லை. ஆகையால் நீங்கள் இப்பூசையனைத்தையும் இம்மலைக்கே இடுங்கள் ' என்ன, இடையர்கள் இதைக்கேட்டு அங்ஙனமே செய்ய, கண்ணபிரான் தானே ஒரு தேவதையின் ரூபங்கொண்டு அவற்றை முற்றும் அமுதுசெய்தருள, அவ்விந்திரன் கோபத்தோடு புஷ்கலாவர்த்தம் முதலிய பல மேகங்களை ஏவி, கண்ணன் விரும்பி மேய்க்கிற கன்றுகளுக்கும் பசுக்களுக்கும் கண்ணனுக்கு இஷ்டரான இடையர்களுக்கும் இடைச்சியர்க்கும் தீங்கு தரும்படி கல் மழையை ஏழு நாள் இடைவிடாது பெய்வித்தபொழுது, கண்ணன் கோவர்த்தநமலையை யெடுத்துக் குடையாகப் பிடித்து மழையைத் தடுத்து எல்லாவுயிர்களையும் காத்தருளினன். .... ... *

**ஆய்ச்சியரது துகில்களையும் வளைகளையுங் கொண்டதும் குரவைகோத்துக் குடக்கூத்தாடினதும்.**

திருவாய்ப்பாடியிலுள்ள கோபஸ்த்ரீகள் கண்ணபிரானிடங்கொண்ட வேட்கை மிகுதியினால் அவன் தம்மிடம் காதல் விஞ்சுமாறு நோன்புநோற்று அந்நோன்பின் முடிவில் யமுனாநதியிலே நீராட அப்போது அவர்கள் இடைச்சாதியொழுக்கத்தின்படி கரையில் அவிழ்த்து வைத்துவிட்டுப்போன ஆடைகளையெல்லாம் கண்ணன் ரஹஸ்யமாகவந்து எடுத்துக்கொண்டு அருகிலிருந்ததொரு மரத்தின் மேலேறியிருந்து சிறிதுபோது அவர்களை அலைக்கழித்துப்பின்பு அவர்கள் கைகூப்பி வணங்கி மிகவும் கெஞ்சிக் கேட்டுக்கொண்டதனால் அவர்களுக்கு அத்துகில்களை

2

அளித்தருளினன் ... .... மற்றொருகால், கண்ணபிரான் தன்னிடத்து விருப்பமுற்ற ஆயர்மாதருடைய ஆவலைத் தீர்க்கக் கருதி சரத்காலத்தில் ஓரிரவில் யமுனைக்கரையில் நின்று வேணுநாதம் செய்ய, அதனைக்கேட்ட இடைப்பெண்களெல்லாரும் மாமியார் மாமனார் முதலியோரையும் மதியாமல் காவல் கடந்து புறப்பட்டுச் சென்று க்ருஷ்ண கோஷ்டியில் அந்வயிக்க, அன்றிரவு அவர்களுடன் பரமபோக்யமாகக் குரவைக் கூத்தாடினன். [குரவையாவது-ஒவ்வொருஆய்ச்சியின் பக்கத்தில் ஒவ்வொரு கண்ணனாகப் பலவடிவெடுத்து நின்று மண்டலித்தாடும் ராஸக்ரீடை.] அப்பொழுது கோபிமார்கள் பரமாநந்தத்தின் எல்லையிலே நிற்பதைக் கண்ட கண்ணபிரான் 'இது வெள்ளக்கேடாக வொண்ணாது; இந்த ரஸத்தை மாற்றவேணும்' என நினைத்து அவ்வாயர்மங்கையரை விட்டுப் பிரிந்துபோய் ஒளிக்க, கோபிகள் கண்ணனைத் தேடிக் காணாமல் காதல் மீதூர்ந்து அப்பிரானைக் காணுமளவும் தாங்கள் உயிர்தரித்திருக்கைக்காக, ஒருத்தி க்ருஷ்ணனாகவும் மற்றொருத்தி காளியனாகவும் வேறொருத்தி வேறொன்றாகவும் பாவனைகள் செய்துகொண்டு கிருஷ்ணனுடைய செயல்களையெல்லாம் அநுகரித்துத் தரித்திருக்கையில்; "தாஸாமாவிரபூத் சௌரி: ஸ்மயமாநமுகாம்புஜ:—பீதாம்பரதரஸ் ஸ்ரக்வீ ஸாக்ஷாத் மந்மதமந்மத:.' என்றபடி—புன்முறுவல்செய்து பீதகவாடை யுடுத்துப் பரமவிலக்ஷணமான திருக்கோலத்துடனே எழுந்தருளி அவர்களுக்கு ஸேவைஸாதித்து அப்பொழுதே அவர்களது தாபமெல்லாம் ஆறும்படி பலவித லீலைகளைச் செய்து ஆநந்தப் படுத்தினான் ... க்ருஷ்ண லீலைகளில் குடக்கூத்தாடினது மிகச் சிறப்புற்றது. குடக்கூத்து—ப்ராஹ்மணர்க்குச் செல்வம் விஞ்சினால் யாகஞ்செய்வதுபோல, இடையர்க்குச் செல்வம் விஞ்சினால் அதனாலுண்டாகுஞ் செருக்குக்குப் போக்குவீடாக அவர்களாடுவதொரு கூத்து; இதனை, தலையிலே அடுக்குக் குடமிருக்க இரு தோள்களிலும் இரு குடங்களிருக்க இரு கையிலும் குடங்களையேந்தி ஆகாசத்திலே யெறிந்து ஆடுவதொரு கூத்து—என்பர்.

### சீமாலிகனோடு தோழமை கொண்டு சக்கரத்தால் தலைகொண்டது.

திருவாய்ப்பாடியில் மாலிகனென்பானொருவன் கண்ணபிரானுக்கு உயிர்த்தோழனாய் அப்பிரானிடத்தில் பலவகையாயுதங்களையும் பயின்று ஒருவர்க்கு மஞ்சாமல் அஹங்காரியாய் ஸாது ஜனங்களை நலிந்துகொண்டு இதுவே போதுபோக்காக விருந்தான். அதனால் கண்ணபிரானுக்கு அவனை வதஞ் செய்து விடவும் எண்ணமுண்டாயிற்று. ஆனாலும் 'நண்பனாகிய இவனை நாம் கொல்வது தகாது, என்ன செய்யலாம்' என்கிற ஆலோசனை யுண்டாயிற்று. ஒருபாயம் தோன்றி, ஒரு நாள் அவனை நோக்கி 'நீ இப்படி அஹங்காரியாய் ஸாது ஜனங்களை நலியா நிற்பது தகுதியன்று' என்ன, ஆஸுரப்ரக்ருதியான அந்த மாலிகன் தன் வாயில் வந்தபடி பிதற்றி, 'நீ எல்லா ஆயுதங்களையும் எனக்குக் கற்பித்தும் சக்ராயுதப் பயிற்சி மட்டும் செய்விக்கவில்லையே' என்று கண்ணபிரான் மேற் குறைகூற 'இதில் பழகுவது உனக்கு முடியாது, எனக்கே அஸாதாரணமானது'' என்று கண்ணன் கூற' 'என்னால் முடியாதது மொன்றுண்டோ? நீ அவசியம் அதைக் கற்பிக்கவேணும்' என்று அவன் நிர்ப்பந்திக்க, கண்ணன் இதுதான் தக்க ஸமயமென்று திருவுள்ளத்திற்கொண்டு சக்ராயுதத்தை யெடுத்துத் தன் ஒற்றை விரலால் சுழற்றி மேலேயெறிந்து கையிலேற்க, 'இது எனக்கு அரிதோ?' என்று மாலிகன் சொல்ல; 'இது உனக்கு அரிதேகிடாய்' என்று கண்ணன் கூறவும் அதை அவன் கேளாமல்

